சர்வே ரேஞ்சு அலுவலகம் (மதுரை)

* 52 **கேள்வி.—திரு. கரு. சீமைச்சாமி** : கனம் பொதுப் பணித் துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) மதுரையில் அமைக்கப்படவிருக்கும் சர்வே ரேஞ்சு அலுவலகத்துக்குப் பதிலாக ஏற்கெனவே இருக்கிற நம்பர் மூன்று வது சர்வே பார்ட்டி அலுவலகத்தையே மாற்றி அமைக்கக் கோரி இராமநாதபுரம் நகராட்சி மன்றத்திலிருந்து தீர்மானம் வந்ததா ?

(இ) அப்படியானல், அதன்மீது என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது ?

THE HON. SRI V. RAMAIAH : (அ) No, Sir.

(இ) Does not arise.

குந்தா மின்சாரத் திட்டம்

* 53 **கேள்வி.—திரு. அ. பெ. தர்மலிங்கம்** : கனம் கைத்தொழில் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) குந்தா மின்சாரத் திட்டத்தின் மூலம் தற்போது கிடைக்கும் மின்சக்தி எவ்வளவு ?

(இ) அது எந்தப் பிரதேசங்களுக்குப் பயன்படுகிறது ?

THE HON. SRI R. VENKATARAMAN : (a) 180,000 K Ws. from Kundah I and II stages.

(b) The power is fed into the Madras Grid and thereby benefits the entire State.

**திரு. மீ. கலியாணசுந்தரம்** : இப்பொழுது தண்ணீர் நிலை குறைந்த காரணத்தினல் மின்சார உற்பத்தியும் குறைவாக இருக்கிறதென்று செய்தி வந்திருக்கிறது. குந்தா சம்பந்தப்பட்ட வரை எந்த நிலையில் இருக்கிறதென்று அறிய விரும்புகிறேன்.

**கனம் திரு. ஆர். வெங்கடராமன்** : குந்தா சம்பந்தப்பட்டவரை மழை இல்லாவிட்டால் இன்னும் மூன்று நாட்களுக்குத்தான் தண்ணீர் இருக்கும்.

ரெவின்யூ டிவிஷனல் ஆபிஸர் (தேவகோட்டை)

* 54 **கேள்வி.—திரு. சா. கணேசன்** : கனம் முதல் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) ஒரு ரெவின்யூ டிவிஷனல் ஆபீசர் எத்தனை வருட காலம் ஒரு டிவிஷனிலேயே வேலை பார்க்கலாம் ?

(இ) தற்போதுள்ள தேவகோட்டை டிவிஷனல் ஆபீசர் அந்த டிவிஷன் பொறுப்பை ஏற்று எத்தனை வருட காலமாக அங்கேயே பணியாற்றி வருகிறர் ? காரணமென்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (அ) Generally no Deputy Collector is retained in the same Divisional charge for a period of more than three years, save for exceptional reasons.

30th June 1962]

(இ) The Revenue Divisional Officer, Devakottai, Sri Fakir Ahmed has been retained in the same division for more than three years for administrative reasons. He has since been transferred from that division.

**திரு. சா. கணேசன் :** இரண்டு முறைகள் மாற்றப்பட்டு அந்த மாற்றுதல் ஆர்டர் மறுபடியும் கான்சல் செய்யப்பட்டு அங்கேயே கிட்டத்தட்ட 4½ ஆண்டுகள் பதவி வகித்தாரே, அதற்குக் காரணம் என்ன ?

**கனம் திரு. எம். பக்தவத்சலம் :** அதற்குக் காரணம் நான் சொன்ன பதிலிலேயே குறிப்பிடப்பட்டிருக்கிறது. 'அட்மினிஸ்ட்ரேடிவ் ரீசனு'க்காக முடிவு செய்யப்பட்டது. நிர்வாகத்தில் அவசியம் ஏற்பட்டால் அம்மாதிரி நடக்கும்.

*Full Finance Scheme (report)*

*55 *Q.*—SRI M. KALYANASUNDARAM : Will the Hon. the Minister for Co-operation be pleased to place on the Table of the House a copy of the report of the Full Finance Scheme Committee, together with a statement of action taken on the recommendations of the Committee?

THE HON. SRI N. NALLASENAPATHI SARKARAI MANRADIAR : The report of the Full Finance Scheme Committee is under consideration. The suggestion to place on the Table of the House a copy of the report together with a statement of action taken on the recommendations contained therein will be considered as soon as the Government have taken decisions on the recommendations.

**திரு. மீ. கலியாணசுந்தரம் :** இந்த அறிக்கை அரசாங்கத்திற்கு சமர்ப்பிக்கப்பட்டு ஒரு ஆண்டுக்கு மேல் ஆகிறது. இன்னும் பரிசீலனையில் இருக்கிறதா ? அரசாங்கம் இன்னும் ஒரு முடிவுக்கு வரவில்லையா ? அப்படியென்றால் ஒரு முடிவுக்கு வர எத்தனை ஆண்டுகள் ஆகும் என்று தெரியவில்லை. ஆகையால் இந்த அறிக்கையையாவது இந்தச் சபையில் வரக்கூடிய கூட்டுறவு மான்யம் வரும்போது வைக்க ஏற்பாடு செய்யப்படுமா ?

**கனம் திரு. ந. நல்லசேனபதி சர்க்கரை மன்றாடியார் :** இதற்கு ஒரு கமிட்டி போடப்பட்டு அந்தக் கமிட்டி பரிசீலனை செய்தது. கூடியவரையில் ரிபோர்ட்டை வைக்கும்படியான நிலை ஏற்பட்டுவிடும். இன்னும் ஒருசில 'ரெகமென்டேஷன்கள்' பார்க்க வேண்டியிருக்கிறது.

**லோகல் பண்டு டிஸ்பென்ஸரி (ஆமூர்)**

*** 56 கேள்வி.—திரு. மு. கருணாநிதி :** கனம் சுகாதார அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

நாகை தாலுக்கா ஆமூர் கிராமத்தில் 'லோகல் பண்டு டிஸ்பென்சரி'-யில் இரண்டு வருடமாக டாக்டர் இல்லாமலிருப்பது சர்க்கார் கவனத்திற்குக் கொண்டுவரப்பட்டதா ?

THE HON. SRIMATHI JOTHI VENCATACHELLUM : No, Sir. The dispensary vested in the Thanjavur District Board formerly and it now vests in the Tiruvarur Panchayat Union.